ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
இயற்றிய

பிற நாடகங்கள்



| | | |
|---|---|---|
| விரத வீரர் பீஷ்மர் | ரூ. | 2-50 |
| ஹரிச்சந்திரன் | — | 2-00 |
| தவப்புதல்வர்கள் | — | 2-00 |
| வாலிமோட்சம் | — | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | — | 1-75 |
| விபீஷணன் சரணாகதி | — | 1-50 |
| தான வீரன் கர்ணன் | — | 1-00 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | — | 1-00 |
| தபோபலன் | ரூ. | 1-00 |



15-4

# ஏகலைவ்யனின் குருபக்தி

(நாடகம்)




இயற்றியவர்
ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
எலமனூர் ரயில்வே ஸ்டேஷன், திருச்சி ஜில்லா.
1985

15-4

# ஏகலைவ்யனின் குருபக்தி

## காட்சி 1.

*(தந்தை வீரவர்மனும் மைந்தன் ஏகலைவ்யனும் உரையாடுதல்)*

**ஏகலைவ்யன்:** அப்பா, கிட்டத்தட்ட ஒவ்வொரு நாளும் காலை உணவை முடித்தவுடன் ஒரு சிலரோடு கூடிக் கொண்டு எங்கேயோ போகிறீர்கள். சில நாட்களில் நண்பகலில் திரும்பி வருகிறீர்கள். வேறு சில நாட்களில் மாலையில் திரும்பி வருகிறீர்கள். இன்னும் ஏதோ சில நாட்களில் மாலையில் போய் அடுத்த நாள் காலையில் திரும்பி வருகிறீர்கள். நீங்கள் எல்லாரும் எங்கே அப்பா போகிறீர்கள்? போய் என்ன செய்கிறீர்கள்?

**வீரவர்மன்:** நாங்கள் வேட்டையாடப் போகிறோம்.

**ஏகலைவ்யன்:** வேட்டையாடுதல் என்றால் என்ன அப்பா?

**வீரவர்மன்:** வனத்தில் வாழும் சில மிருகங்களைத் தேடிக் கண்டுபிடித்து அவைகளைக் கொல்லுவது வேட்டையாடல் என்று சொல்லப்படுகிறது.

**ஏகலைவ்யன்:** அவைகள் நம் வீட்டுக்கு வருவதில்லை. நம்மை எந்த விதத்திலும் அவைகள் உபத்திரவப்படுத்துவதில்லை. அப்படியிருக்க அவைகளை ஏன் தேடிக் கண்டு பிடித்துக் கொல்லவேண்டும்?

**வீரவர்மன்:** அவைகளைக் கொன்றேயாக வேண்டும். நாம் வளர்த்துவரும் ஆடு மாடுகளை அவைகள் தாக்கிக் கொன்று தூக்கிக்கொண்டு போய்விடுகின்றன. நாம் வளர்க்கும் ஆடு மாடுகளைப் புசித்து அவைகள் உயிர்

வாழ்ந்து வருகின்றன. அகப்பட்டால் மனிதனையும் அவைகள் கொன்று புசிக்கின்றன. ஆதலால் நம்மைப் பாதுகாத்தல் பொருட்டும், நம்முடைய கால்நடைகளைப் பாதுகாத்தல் பொருட்டும், நாம் அவைகளைக் கொன்றாக வேண்டும். மேலும் நாம் வேட்டையாட வேண்டிய மற்றொரு விலங்கு உண்டு. அது காட்டுப் பன்றி. கிழங்கு வகைகளைத் தின்று அவைகள் உயிர் வாழ்கின்றன. காட்டுப் பன்றியை வேட்டையாடிக்கொல்வதால் நம்முடைய பயிர் பச்சைகளை நாம் காப்பாற்றுகிறோம். அவைகள் போக்கில் விட்டுவிட்டால் பூமியில் எதையும் நாம் சாகுபடிபண்ண முடியாது. இப்படி வெவ்வேறு விதங்களில் வெவ்வேறு காரணங்களை முன்னிட்டு வெவ்வேறு காட்டுமிருகங்களை நாம் வேட்டையாடுகின்றோம். அதற்காகவே நாங்கள் பகலிலும் இரவிலும் அடிக்கடி வனத்துக்குச் செல்லுகிறோம்.

ஏகலைவ்யன்: அப்பா தினந்தோறும் நாம் கோயிலுக்குப் போகிறோமே அங்கே கடவுள் வழிபாடு பண்ணுகிறோம் என்று சொல்லுகிறோமே கடவுள் வழிபாடு என்றால் என்ன?

வீரவர்மன்: உலகிலுள்ள உயிர்களனைத்தினுடைய தோற்றத்துக்கும் இருப்புக்கும் ஆதாரமாகத் தெய்வம் இருக்கிறார். அவரை நாம் கண்கொண்டு காணமுடியாது. ஆயினும் நமக்கு நலம்புரிய வேண்டுமென்று அவரிடம் விண்ணப்பித்தால் நாம் நலம் பெறுகிறோம்.

ஏகலைவ்யன்: நலம் என்றால் என்ன அப்பா?

வீரவர்மன்: மக்களில் சிலரை நாம் நேசிக்கிறோம். வேறு சிலரை வெறுக்கிறோம். ஆனால் யாரையும் வெறுக்கா

திருப்பது நலன். யாருக்குமே துன்பம் விளைவியா திருப்பது நலன். சந்தர்ப்பம் கிடைக்கிற பொழுதெல் லாம் மற்ற மனிதர்களுக்கு நாம் உதவி புரியவேண்டும். அவர்கள் கஷ்டப்பட்டால் அந்தக் கஷ்டத்தை நீக்க நாம் முழுமனதோடு முந்தவேண்டும். இத்தகைய செயல்கள் நலன் எனப்படுகின்றன.

**ஏகலைவ்யன்:** இச்செயல்களை நாம் நேரே செய்யலாமே. இவைகளைக் குறித்துக் கடவுளை ஏன் கேட்கவேண்டும்?

**வீரவர்மன்:** நம்மை அறியாது நம்மிடத்துச் சுயநலம் வளரு கிறது. அந்தச் சுயநலம் பரநலனுக்கு இடம் தராது. நம்முடைய மனம் எப்பொழுதுமே நல்ல மனமாக இருக்கவேண்டும். மறைந்து கிடக்கிற சுயநலத்தையும், கெட்ட எண்ணங்களையும் நம்முடைய மனத்தினின்று போக்கவேண்டுமென்று தெய்வத்திடத்துப் பிரார்த் தனை பண்ணினல் அவருடைய அருளால் நம்முடைய மனது திருந்தியமைகிறது. அதற்காகத்தான் நாள் தோறும் நாம் கடவுளைப் பிரார்த்திக்கிறோம்.

**ஏகலைவ்யன்:** வனத்துக்குப் போகிறபொழுது நீங்கள் சில வேளைகளில் இதைத் தூக்கிச் செல்லுகிறீர்கள். வேறு சில வேளைகளில் அதோ அங்கே மூலையில் சுவ ரில் சாய்த்து வைக்கப்பட்டிருக்கிறவைகளைத் தூக்கிச் செல்லுகின்றீர்கள். இவைகளின் பெயர் என்ன? இவைகளைநீங்கள் எப்படிப் பயன்படுத்துகின்றீர்கள்?

**வீரவர்மன்:** (சுட்டிக்காட்டி) இக்கருவியின் பெயர் வில். இதில் தொடுத்து எய்யப்படுவது அம்பு. அதோ அங்கே சுவரில் அம்பறாத்தூணியில் அவைகள் வைக்கப் பட்டிருக்கின்றன.

ஏகலைவ்யன்: அப்பா அவைகளை எப்படிப் பயன்படுத்துகின்றீர்கள்? எனக்குக் காட்டித் தாருங்கள்.

(வீரவர்மன் ஓர் அம்பை வில்லில் தொடுத்து எய்து காட்டுகிறான்.)

ஏகலைவ்யன்: அப்பா இது மிக நன்றாக இருக்கிறது. நாங்கள் விளையாடிக்கொண்டிருக்கிறபொழுது நாயோ, ஊர்ப்பன்றியோ ஏதாவது வந்தால் கல்லைவிட்டு எறிந்து விரட்டியோட்டுகிறோம். பாம்பு அல்லது தேள் தென்பட்டாலும் கல்லால் அடித்து அவைகளைக்கொல்லுகிறோம். அச்செயல் சுலபத்தில் முடிந்துவிடுகிறது. விளையாடப்போகிற இடத்துக்கெல்லாம் நாங்கள் கற்களைத் தூக்கிக்கொண்டு போவதில்லை. நீங்கள் மட்டும் ஏன் இந்த வில்லையும் அம்புகளையும் சிரமப்பட்டுத் தூக்கிக்கொண்டு போகவேண்டும்?

வீரவர்மன்: உங்கள் விளையாட்டுக்குக் கற்கள் போதுமானவை. நாங்கள் கற்களை நெடுந்தூரம் வீசமுடியாது. ஒரு கல்லடி பட்டவுடனே அடுத்த கல்லடி வருவதற்கு முன்பு சிங்கம், புலி, கரடி முதலியவைகள் எங்களைத் தாக்கிக் கொன்றுவிடும். ஆனால் வில்லும் அம்பும் கொண்டு அவைகளுடைய மர்மஸ்தானங்களுக்குக் குறிபிடித்து எய்தால் குறிப்பிட்ட இடத்திலேயே அம்பு பாய்ந்து அந்த விலங்குகளின் வேகத்தை அடக்கிவிடும்.

ஏகலைவ்யன்: அப்படியா! நான் பெரியவன் ஆகின்றபொழுது வில்வித்தையில் கெட்டிக்காரன் ஆக விரும்புகின்றேன். வில்லையும் அம்பையும் பற்றிச் சொன்னீர்கள். இனி அந்த மூலையிலிருக்கும் கருவியின் பெயர் என்ன? அதை எப்படிப் பயன்படுத்துகின்றீர்கள்?

வீரவர்மன்: அக்கருவியின் பெயர் வேல். நீண்ட காம்புடைய தாக அது இருக்கிறது. காட்டுப் பன்றியோ அம்பு அடியைச் சமாளித்துக்கொண்டு ஓடிவிடும். ஆனல் முறையாக அதன்மீது வேல் வீசினல் அதனுடைய கடினமான உடலைப் பொத்துக்கொண்டு அது உள்ளே பாயும். வேலைத் தூக்கிக்கொண்டு அது வேகமாக நெடுந்தூரம் ஓடமுடியாது. அதற்குள்ளாக வேறு பல வேல்களையும் வீசி அந்த விலங்கை நாங்கள் வென்று கொன்றுவிடுவோம்.

ஏகலைவ்யன்: அப்படியா, இப்படி வேட்டையாடுவதில் எனக்கு விருப்பமில்லை. ஆனல் நல்ல வில்லாளியாக நான் விரும்புகிறேன். இந்தப் பெரிய வில்லைத் தூக்க என்னல் முடியாது. எனக்கேற்ற சிறிய வில்லும் அதற் கொத்துள்ள அம்புகளையும் அப்பா எனக்கு ஆயத்தப் படுத்தித் தருவீர்களா?

வீரவர்மன்: மகனே மிக நன்று. 'விளையும் பயிர் முளையிலே' என்று சொல்லுவார்கள். நீ நல்ல வில்லாளியாவாயாக. உனக்கேற்ற சிறிய வில்லையும், அம்புகளையும் நான் விரைவில் ஆயத்தப்படுத்தித் தருகிறேன்.

———

## காட்சி 2.

(வேடத் தோழர்களுடன் ஏகலைவ்யன் உரையாடுதல்)

**தோழன்–1:** ஏகலைவ்யா, அம்பு எய்துதலில் நீ எங்களை எல்லாம் விடச் சமர்த்தனாக இருக்கிறாய். வேட்டை யாடுதற்கு நாம் அனைவரும் படைத்துள்ள பயிற்சி போதுமானது. அப்படியிருந்தும் நீ ஏன் ஒருமை மனதுடன் நெடுநேரம் வில்வித்தையிலேயே மூழ்கியிருக் கின்றாய்?

**ஏகலைவ்யன்:** மக்களுக்கிடையில் வித்தைகள் பல இருக் கின்றன. அக்கலைகளைப் பயிலுதலில் மனிதன் அடை கிற முன்னேற்றத்துக்கு முடிவில்லை. வில்வித்தையைத் தனுர்வேதம் என்று சான்றோர்கள் சொல்லுகின்றனர். எல்லா வித்தைகளின் மேலான நிலைகளெல்லாம் வேதங் கள் என விளக்கப்படுகின்றன. அத்தகைய வரம்பு கடந்த மேலான நிலை வில்வித்தைக்கும் உண்டு. என் னால் இயன்ற அளவு அதில் பயிற்சி பெற்று முன்னேற்ற மடைய நான் விரும்புகிறேன்.

**தோழன்–2:** சட்டி சட்டியாக, விதவிதமான உணவு வகை களைச் சமைத்து வைத்திருந்தாலும் நாம் ஒவ்வொருவரும் உண்பது அவரவர் வயிற்றுக்கு ஏற்ற அளவே. மிகை பட உண்டால் அஜீர்ணம் வரும். வயிறு கெட்டுப் போம். குறைபட உண்டால் உடல் வலிவு குன்றிப் போம். உணவை அளவெடுத்து உண்பவனே அறிஞன். வாழ்க்கைக்கு அன்னவன் தகுதியுடையவன் ஆகின் றான். உணவு எவ்வளவு மேலானதாயிருந்தாலும் மீதூண் விரும்பேல் என்பது கோட்பாடு. அதே விதத்தில் வித்தைகளில் பலப் பலப் பகுதிகள் இருக்

கலாம். அவைகளில் மேலாம் பகுதிகளும் இருக்கலாம். அவைகளால் நமக்கு ஆவதென்ன? நம்முடைய திறமை வாய்ந்த வாழ்க்கைக்கு ஏற்றவளவே நமக்குத் தேவையா யிருக்கிற கலைகளில் பயிற்சி பெற்றால் போதுமானது. மிகைபட்ட உணவு வயிற்றைக் கலக்கிவிடுவது போன்று மிகைபட்ட கலைப் பயிற்சி மூளையைக் கலக்கிவிடும். இந்த வம்பு நமக்கு எதற்காக?

ஏகலைவ்யன்: உண்ணும் உணவைப்பற்றி நீ மொழிந்தது முற்றிலும் மெய். ஆனால் கலையின் பாங்கு அத்தகைய தன்று. அதில் வரம்பு கடந்துபோதல் என்பதே இல்லை. வாழ்நாள் முழுதிலும் கலைகளை வளர்த்துக்கொண்டே வரலாம். கலை வளர்ச்சி அறிவைத் தெளிவுபடுத்துகின் றது. அது ஒருநாளும் அறிவைக் குழம்பிப்போகும்படி செய்யமாட்டாது.

தோழன்–3: ஏகலைவ்யா, நமக்கு இந்த வம்பு வேண்டாம். அளவுக்கு மீறி ஓயாது தின்றுகொண்டு இருப்பவனுக் குத் தொந்தி பெரியதாகிறது. உடல் திட்பத்தை அது கெடுக்கிறது. அதே விதத்தில் மிகைப்பட்ட கலை தலை வீங்கிப் போகும்படி செய்துவிடும். அந்த வம்பு நமக்கு வேண்டாம். வில்வித்தையில் இளைஞர்களாகிய நாம் பெற்றுள்ள பயிற்சி முதியோர்களுடைய பயிற்சிக்குக் கிட்டத்தட்ட சமனாயிருக்கிறது. நமக்கு அது போதும்.

ஏகலைவ்யன்: மிகைபட உண்பதால் தொந்தி தள்ளிக் கொண்டு வருவது உண்மை. ஆனால் கலையின் பாங்கு அத் தகையதன்று. அதிகம் கற்பதால் தலை வீங்கிப்போம் என்றுஎண்ணுவது குருட்டு நம்பிக்கை. சமுதாயத்தில் மகாபண்டிதர்களைப் பார்க்கிறோம். அவர்களுடைய தலை எங்கேயாவது வீங்கியிருப்பதைப் பார்க்கிறோமா?

**தோழன்–1:** மகா வித்வான்கள் ஆவதற்கென்றே அவர்கள் பிறப்பெடுத்தவர்கள். நம்முடைய பிறப்பு அத்தகைய தன்று. விளையாட்டுப் போன்று வேட்டையாடி வயிறு வளர்க்க நாம் பிறந்துள்ளோம். நாம் பெற்றுள்ள திறமை நம் தரத்துக்குப் போதுமானது.

**ஏகலைவ்யன்:** மக்களாகப் பிறந்திருக்கிறவர்களுக்கிடையில் இன்னின்னர் இன்னின்ன கலைகளுக்குத் தகுதி வாய்ந்தவர்கள் என்னும் பாகுபாடு கிடையாது. பல தடவைகளில் மகா பண்டிதர்களுக்குப் பிள்ளைகளாக அறிவிலிகள் தோன்றுவதுண்டு. பாமரர்களுக்குப் பிள்ளைகளாகப் பேரறிவு படைத்தவர்கள் பிறப்பதும் உண்டு. கலைத் திறமைக்கும் பிறப்புக்கும் சம்பந்தமில்லை.

**தோழன்–2:** ஏகலைவ்யா, நீ சொல்லுவது சரியன்று. 'குலத்தளவேயாகுமாம் குணம்' என்றும் 'குலத்தளவேயாகுமாம் கல்வி' என்றும் பெரியோர்கள் பலர் பேசிக்கொள்கிருர்கள். ஓர் ஆழாக்கில் இரண்டு ஆழாக்கு அரிசியை அடைத்து வைக்க முடியுமா?

**ஏகலைவ்யன்:** அரிசியின் ஸ்தூல அமைப்பு வேறு. அறிவின் நுண்மை வேறு. அரிசிக்கு எடை உண்டு. பருமன் உண்டு. அறிவோ வரம்புகடந்தது. மானுட மண்டைக்குள் இத்தனைவிதமான அறிவுகளைத் திணிப்பது எங்ஙனம் என்று கருதுவது மடமை. மனத் திறமைக்குச் சான்று ஒன்று சொல்லுகிறேன் கேள். தூங்குகிறபொழுது கனவு காண்கின்ருேம். கனவிலே பெரிய பெரிய மலைகளைப் பார்க்கிருேம். அவ்வளவு பெரிய மலைகள் மனதுக்குள் எப்படி ஒடுங்கி இருந்தன என்று கேட்கலாகாது. நாம் காண்கிற புற உலகுக்கு நிகராகப் பெரிய பெரிய கனவு உலகங்களைக் கற்பிக்க வல்லது

மனது. அறிவுத் திறனுக்கு வரம்பு கிடையாது என்ப தற்கு நாம் காணுகின்ற கனவே சான்ருகிறது.

தோழன்-3: ஏகலேவ்யா, அது இருக்கட்டும். மேலாம் கலேகளுக்கு உயர்ந்த இனத்தினரே தகுதிவாய்ந்த வர்கள் என்று உலகத்தவர்கள் பேசிக்கொள்ளுகிருர் களே! அக்கோட்பாட்டை மாற்றியமைக்க நமக்கு முடியுமா?

ஏகலேவ்யன்: மானுட வாழ்க்கையைப்பற்றிய கோட்பாடு ஒன்று உண்டு. "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான்" என் பதுபயிற்சியைப் பொறுத்ததாகிறது. நல்ல பயிற்சி கொடுத்தால் கால்நடைகள் நடனம் புரிகின்றன. சில கேள்விகளுக்குத் தலேயசைத்து அவைகள் விடைதரு கின்றன. பயிற்சிக்கு வரம்பு கிடையாது. பயிற்சியின் விளேவாகப் பாமரன் பண்டிதனுகலாம். பயிற்சியின்மை யின் விளேவாக மானுடர் மாக்கள் ஆவார்கள். மேலாம் பயிற்சியை நாடுபவர் அறிவுடையோராவர்.

தோழன்-1: பயிற்சியை அனுசரித்து மனிதன் மேலோன் ஆகிருன், அல்லது கீழோன் ஆகிருன் என்று நீ கூறு கிருய். இப்பொழுது நாம் எல்லாரும் பெற்றுள்ள பயிற்சி நல்வாழ்வு வாழுதற்கு நமக்குப் போதுமானது. அதற்கு மேல் அசாதாரணமாகப் பகல் கனவு காண்பது போன்று, நீ ஏதேதோ வல்லமைகளே வில்வித்தையில் பெறவேண்டுமென்று கருதியுள்ளாய். அதனுல் நமக்கு வருகிற லாபமென்ன?

ஏகலேவ்யன்: என்ன லாபம் வரும் என்னும் கோட்பாட் டைப் பொருளேக்கொண்டு முடிவு கட்ட முடியாது.

வானசாஸ்திரம் என்பது ஒன்று இருக்கிறது. அது நட்சத்திரங்களுடைய நடமாட்டத்தைப் பொறுத்தது. ஒரு சிலர் அக்கலையிலேயே ஆயுள் முழுதையும் செலுத்துகின்றனர். அதனால் என்ன லாபம் என்று நாம் கேட்கலாகாது. இயற்கையின் அமைப்பிலுள்ள மகிமையைக் கண்டு மகிழ்ந்திருப்பதே வான சாஸ்திரி ஒருவன் பெறுகிற ஊதியமாகும்.

**தோழன்-2:** வான சாஸ்திரி ஒருவன் விண்ணில் மின்னிக் கொண்டிருப்பவைகளைப் பார்த்து மகிழ்வடைகிறான். அதுபோன்று எத்தகைய கலையில் ஈடுபட்டு நீ மகிழ் வடைய எண்ணம் கொண்டிருக்கிறாய்?

**ஏகலைவ்யன்:** வில் வித்தையில் மேலான பகுதி தனுர் வேதம் என்னும் பெயர் பெறுகிறது. அதில் கருத் தைச் செலுத்த நான் விரும்புகிறேன்.

**தோழன்-3:** மேலாம் பகுதி என்று பகர்ந்தாயே, அதன் பாங்கு என்ன என்பதைச் சற்று விளக்கு பார்ப்போம்.

**ஏகலைவ்யன்:** முன்பொரு காலத்தில் தசரதராமன் என்ற நரோத்தமன் ஒருவன் இருந்தான். அவன் தனுர்வேதத் தின் நுட்பங்களை விசுவாமித்திரரிடமிருந்து கற்றுக் கொண்டான். சாதாரணமாக நாம் எய்கிற அம்பு நேராகக் குறியை நோக்கிப் போகிறது. அதற்கு மேல் அது ஒன்றுக்கும் உதவாது. ஆனால் மந்த்ர சக்தியோடு கூடிய அம்பு ஆனது இலக்கு எங்கிருந்தாலும் அதைத் தேடிப் பிடித்து அடிக்கும். பிறகு எய்தவனிடத்தே அது திரும்பி வரும். இத்தகைய வல்லமை தனுர் வேதத்தினுடைய மேலாம் பகுதியாகிறது.

**தோழன்-1:** *இத்தகைய விசித்திரமான வித்தையை உனக்குப் புகட்டித் தருதற்கு இப்பொழுது உலகத்தில் யார் இருக்கிறார்கள்? விசுவாமித்திரருடைய காலம் கடந்து ஓடிவிட்டதே!*

**ஏகலைவ்யன்:** *அக்காலத்திலிருந்த விசுவாமித்திரருக்கு நிகராக இக்காலத்தில் ஹஸ்தினாபுரத்தில் துரோணாச்சாரியர் ஒருவர் இருக்கிறார் என்று கேள்விப்படுகிறேன். அவரிடம் இக்கலையைப் பயில நான் விரும்புகிறேன்.*

**தோழன்-2:** *ஏகலைவ்யா, நீ ஒரு பைத்தியக்காரன். துரோணாச்சாரியர் என்பார் ஒருவர் இருக்கிறார் என்றால் அவர் உன் போன்ற வேடர் வேந்தன் மகன் ஒருவனுக்கு அந்த வித்தையை ஏன் புகட்டவேண்டும்? ஒரு வேளை அவர் புகட்டினால் அதை வைத்துக்கொண்டு நீ அடைகின்ற மேன்மை யாது?*

**ஏகலைவ்யன்:** *கலையில் முன்னேற்றமடைவதே மேன்மை. தனுர் வேதம் பயின்று அதன் மகிமையில் நான் மூழ்கி இருப்பேன்.*

**தோழன்-1:** *ஏகலைவ்யா, நீ ஆகாயக் கோட்டை கட்டுகிறாய். இப்பொழுது நாம் பெற்றிருக்கிற பயிற்சி நம்முடைய ஜீவிதத்திற்குப் போதுமானது. இதற்குமேல் எதை எதையோ நாடிப் போகவேண்டாம்.*

**ஏகலைவ்யன்:** *மேலான குறிக்கோள் ஒன்றை நாடிப்போகின்றேன். அது வாய்க்காவிட்டாலும் அதன் பொருட்டு நாட்டம் பூண்டிருப்பதே பாராட்டத் தக்கது.*

**தோழர்கள்:** *ஏகலைவ்யா, உன் போக்கு அலாதியானது. உன் விருப்பம்போல் வேண்டியதைப் பண்ணிக்கொள்*

---

## காட்சி 3.

*(ஹஸ்தினபுரத்தில் துரோணுச்சாரியருடன் அர்ஜுனன், பீமன், துரியோதனன், ஜயத்ரதன் ஆகியோர் உரையாடிக் கொண்டிருக்கிறுர்கள்.)*

துரோணுச்சாரியர்: *மாணுக்கர்களுள் தலை மாணுக்கன், இடை மாணுக்கன், கடை மாணுக்கன் என்று மூன்று தரத்தினர் இருக்கின்றனர். நீங்கள் எல்லாரும் கிட்டத்தட்ட தலை மாணுக்கர்களாகத் திகழுகின்றீர்கள். அது எனக்குப் பெரு மகிழ்ச்சியூட்டுகின்றது.*

ஜயத்ரதன்: *ஆச்சாரியரே, தலைமாணுக்கனுடைய பாங்கைத் தயவு செய்து கொஞ்சம் விரித்து விளக்குங்கள்.*

துரோணுச்சாரியர்: *தலைமாணுக்கனிடம் ஏராளமாகக் குரு பக்தி இருக்கிறது. கலையில் முன்னேற்றம் அடைவதற்குக் குருபக்தி இன்றியமையாதது. "வெள்ளத்தனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத் தனையது உயர்வு" என்பது கோட்பாடு. இந்த உயர்வு பெரிதும் குருபக்தியினின்று வருகிறது. உயிரைச் சார்ந்து உடல் இருப்பது போன்று குருவைச் சார்ந்து சிஷ்யனிருக்கிறுன். அதுவே குருபக்திக்கு விளக்கமாகிறது. குரு புகட்டுவதை ஒருமை மனதுடனிருந்து சிஷ்யன் ஏற்கிறுன். மனம் குவிந்திருப்பதற்கேற்ப குரு புகட்டுகிற பாடம் சிஷ்யனுடைய உள்ளத்தில் பதிகிறது. நூலின் இழைகள் நாலாபக்கமும் விரிந்திருந்தால் அந்த நூல் ஊசி ஒன்றன் காதில் செல்லாது. நூல் இழைகள் ஒன்று சேர முறுக்கப்பட்டிருக்குமாகில் அந்த நூலை எளிதில் ஊசியின் காதில் செலுத்தலாம். அதே விதத்தில் எந்த மாணுக்கனுடைய மனது குரு புகட்டுகிற பாடத்தில் குவிந்திருக்கிறதோ அந்த*

மாணுக்கன் அப்பாடத்தை எளிதில் நன்கு கற்கிருன். அல்லும் பகலும் குரு புகட்டியதையே அவன் எண்ணிக் கொண்டு இருக்கிருன். மூன்ருவதாகக் குருவுக்குப் பணிவிடை பண்ணுவதில் தலைமாணுக்கன் கண்ணும் கருத்துமாயிருக்கிருன். 'ஏவா மக்கள் மூவா மருந்து' என்பது கோட்பாடு. இன்னின்ன காலத்தில் இன்னின்ன கிருத்தியங்களைச் செய் என்று குருவானவர் சிஷ்யனைத் தூண்ட வேண்டிய அவசியமில்லை. எந்தச் சந்தர்ப்பத்தில் எத்தகைய பணிவிடையைப் பண்ண வேண்டும் என்பதைத் தலை மாணுக்கன் யூகத்தால் அறிந்துகொள்ளுகிருன். பணிவிடை பண்ணவேண்டுமென்று அவனை யாரும் தூண்டவேண்டியதவசியமல்ல. பணிவிடையின் வாயிலாக மாணுக்கனெருவன் தன்னுடைய மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களையும் குருவுக்கு உரியனவாக்குகின்ருன். விறகுக் கட்டை ஒன்று தீக்கு உரியதாக்கப்படுகிறபொழுது அது தானே தீயாக வடிவெடுத்துத் திகழ்கிறது. அங்ஙனம் திரிகரணங்களால் குரு சேவை செய்கின்றவனுக்குக் குருவின் பண்புகள் யாவும் சொந்தமாகின்றன. நான்காவதாக, நடந்து செல்லும் மனிதனை அவனுடைய நிழல் சார்ந்திருப்பதுபோன்று ஆசாரியனை முற்றும் சார்ந்திருக்கும் மாணுக்கன் நாளடைவில் குருவுக்கு நிகரானவன் ஆகிருன். எதிர்காலத்தில் ஒருவன் எத்தகைய தலைவன் ஆகப்போகிருன் என்பது இப்பொழுது அவன் எத்தகைய மாணுக்கனுக இருக்கிருன் என்பதினின்று விளங்கும். தன்னுடைய இச்சா சுதந்திரம் முழுதையும் யார் ஒருவன் குருவினிடம் ஒப்படைக்கிருனே அவன் குருவினிடமிருக்கும் கலைகளையும் ஏனைய பண்புகளையும் இலகுவாகப் பெறுகிருன்.

**ஜயத்ரதன் :** *ஆச்சாரியரே, தாங்கள் எங்கள் எல்லார்க்கும் தனுர் வித்தை பயிலுவித்து வருகிறீர்கள். இவைகளை எதிர்காலத்தில் நாங்கள் எப்படிப் பயன்படுத்துவது?*

**துரோணச்சாரியர் :** *ஆயுதம் இல்லாதவன் அரை மனிதன் என்பார்கள். ஆயுதம் உடைத்திருத்தல் என்பது வெறு மனே ஆயுதத்தைக் கையில் ஏந்தியிருப்பதாகாது; அந்த ஆயுதத்தை எங்கெந்த சந்தர்ப்பங்களில் எப்படியெல் லாம் பயன்படுத்தலாம் என்பதைப் பயிற்சியின் மூலம் அறிந்திருப்பவனே ஆயுதம் படைத்தவனாகிறான். எதிர் காலத்தில் நீங்கள் எல்லாரும் வெவ்வேறு ராஜ்ஜியங் களை ஆளப்போகிறீர்கள். அரசாட்சி புரிகின்ற ஒருவ னிடத்து எவ்வளவுக்கெவ்வளவு போர்த்திறமை இருக் கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அவன் தன்னுடைய ராஜ்யத்தை நன்கு பாதுகாப்பான்.*

**அர்ஜுனன் :** *ஆயுதம் கையாளுவதில் வல்லவனாயிருப்பவன் வம்பு சண்டைக்குப் போகலாமா?*

**துரோணச்சாரியர் :** *தன்னுடைய திறமையை முன்னிட்டு யார் ஒருவன் தற்பெருமை பூணுகிறானே அவன் அதி விரைவில் தன்னுடைய திறமைகள் யாவையும் இழப் பது உறுதி. வம்பு சண்டைக்குப் போகிறவன் பெரும் பாலும் தன்னைவிட எளியவனாயிருப்பவன் மீதே கலகத் தைக் கிளப்புகிறான். அத்தகையவனும் அதிவிரைவில் தன் ஆதிக்கத்தை இழப்பது உறுதி.*

**பீமன் :** *போர் புரிவதற்குச் சந்தர்ப்பம் வாய்க்காத விடத் துப் போர் வீரன் ஒருவன் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?*

துரோணச்சாரியர்: நாடு ஆளுகிற அரசன் ஒருவன் சண்டை சச்சரவில்லாத சமாதான காலத்திலும் போர்ப் பயிற்சியைப் புரிந்து கொண்டே யிருக்கவேண்டும். சண்டை நிகழுகிறபொழுது சேனைகள் எத்தகைய பயிற்சிகளையும் உற்சாகத்தையும் பெற்றிருக்கிறார்களோ அதே பயிற்சிகளையும் உற்சாகத்தையும் காலமெல்லாம் வளர்த்து வரவேண்டும். அரசன் ஒருவனுக்கும் அவனுடைய சேனைக்கும் யுத்த காலமும் சமாதான காலமும் ஒன்றே. எத்தகைய நிகழ்ச்சி எக்காலத்தில் எப்படி நேர்ந்தாலும் அதை உடனுக்குடனே சமாளிக்க வல்லவனாயிருப்பவனே நல்ல பயிற்சி பெற்றவனாகிறான்.

துரியோதனன்: போர் புரியாது ஆயுளை முடிவுக்குக் கொண்டு வருகிறவன் ஒருநாளும் க்ஷத்திரியன் ஆகமாட்டான் என்னும் கொள்கை ஒன்று உளது அல்லவா? ஆயுட்காலம் முழுதிலும் சண்டைக்குச் சந்தர்ப்பம் வாய்க்காவிட்டால் க்ஷத்திரியன் ஒருவன் அனர்த்தமாய் வாழ்ந்தவன் அல்லவா?

துரோணச்சாரியர்: இது ஒரு சிறந்த கோட்பாடு. எந்த நொடிப்பொழுதில் ஆனாலும் சரி, க்ஷத்திரியனொருவன் போருக்குப் போக ஆயத்தமாயிருக்கவேண்டும். ஆனால் விலக்கக்கூடிய போரை அவன் வேண்டுமென்றே மேற்கொள்வானாகில் அவன் அழிந்துபட்டுப் போவான். முறைவழுவிப் போர்புரிவது க்ஷத்திரிய தர்மம் ஆகாது. போர்புரிய வேண்டிய இடத்தில் அதைத் தவிர்க்க முயலுகிறவனும் க்ஷத்திரியனாகமாட்டான். தன்னுடைய கடமையை முறையாக ஆற்றுதற்கு ஆயத்தமாயிருப்பவன் போர்புரிந்தவனாகிறான். எது ஆக்கிரமிப்பு, எது முறையான யுத்தம் என்பதைச் சரியாகப் பாகுபடுத்தத் தெரிந்துகொண்டவனே நல்ல க்ஷத்திரியனாகின்றான்.

அர்ஜுனன்: வில்வித்தையில் மந்திர சக்தியைக் கையாளத் தெரிந்தவனே அக்கலையில் நிபுணன் ஆகிறான் என்னும் கோட்பாடு இருக்கிறது. மந்திர சக்தியை நாங்கள் எப்பொழுது எவ்வாறு பெறுவோம்?

துரோணாச்சாரியர்: இக்கோட்பாடு தனுர்வேதத்தின் உச்ச நிலையாகும். மந்திர சக்தியைப் பெறுவதற்குப் போர் வீரன் ஒருவன் தன் மனதை முற்றிலும் பண்படுத்த வேண்டும். மனப் பண்பாடு அடையப் பெற்றவனுக்கே மந்திர சக்தியின் முதல் பாடம் புகட்டப்படும். இரண்டு மாணாக்கர்களுடைய மனபரிபாகம் ஒரே விதத்தில் அமைவதில்லை. அந்தந்த மனபரிபாகத்திற்கேற்ற மந்திரம் உபதேசிக்கப்படுகிறது. ஒருவனுக்கு உபதேசிக்கிற மந்திரத்தை மற்றொருவன் அறிந்துகொள்ளமாட்டான். தான் பெற்றுள்ள பயிற்சியை எந்த மாணாக்கனும் விளம்பரப்படுத்தலாகாது. விளம்பரப்படுத்துதற்கேற்ப மந்திர சக்தி அவனிடமிருந்து மறைந்துபட்டுப் போகிறது. வெறும் வில்வித்தையை யார் வேண்டுமானாலும் பயின்று மேன்மையுறலாம். ஆனால் மந்திர சக்தியோடு கூடிய அம்புக்கு அஸ்திரம் என்றும் சஸ்திரம் என்றும் பெயர்கள் வந்துள்ளன. அஸ்த்ர சஸ்த்ரங்களில் வீரன் ஆவது உபாசனையோடு கூடிய அலாதி பயிற்சியாகிறது.

அர்ஜுனன்: அஸ்த்ர சஸ்த்ர வித்தையில் ரகுராமன் அலாதி மேன்மையுற்று இருந்தான் என்று சொல்லுகிறார்களே அது எப்படி?

துரோணாச்சாரியர்: ரகுராமன் முதலில் அஸ்த்ர சஸ்த்ர வித்தைகளை வசிஷ்டரிடமிருந்து கற்றான். அதற்கு மேலுள்ள பகுதிகளை அவன் விசுவாமித்திரரிடமிருந்து

கற்றுக்கொண்டான். கடைசியாக அகஸ்திய மகரிஷியிடமிருந்து அந்தச் சாஸ்திரத்தின் முடிவான பகுதிகளை யெல்லாம் கற்கலானன். சஸ்த்ரம் தாங்கியவர்களுள் தலை சிறந்தவன் தசரதராமன் என்பது பிரசித்தம். தன்னுடைய திறமையனைத்தையும் ராமன் தர்ம பரிபாலனத்துக்கென்றே பயன்படுத்தினன். ராம பாணம் ஒருநாளும் வீண்போனது கிடையாது. எல்லாச் சூழ்நிலைகளிலும் ராமன் கோதண்டராமனகவே இலங்கினன். அரசன் ஒருவன் எந்தச் சந்தர்ப்பத்திலும் அறம் காப்பதற்கு ஆயத்தமாயிருக்கவேண்டும் என்னும் கோட்பாடு அதினின்று வெளியாகிறது.

---

## காட்சி 4.

(நதியில் நீராடிய துரோணுச்சாரியரின் காலை முதலை பிடித்துக்கொள்ளுகிறது. மாணுக்கர்களுக்கிடையில் ஒரே குழப்பம்.)

துரியோதனன்: அடடே, அங்கே பாருங்கள். ஆச்சாரியர் முதலையின் வாயில் அகப்பட்டுக்கொண்டார்.

பீமன்: நதியில் குதித்து அவரை மீட்டெடுக்கலாமா?

ஜயத்ரதன்: ஆச்சாரியரை மீட்டெடுத்தால் அவருடைய கால் போய்விடும்.

பீமன்: நாம் எல்லாரும் நதிக்குள் குதித்து முதலையின் அவயவங்களைப்பற்றிப் பிடிப்போம். அப்போது முதலை பயந்துபோய் ஆச்சாரியரின் காலைவிட்டு விடும்.

துரியோதனன்: அப்படிச் செய்யலாகாது. அதில் நமக்கு ஆபத்து இருக்கிறது. முதலை வாலால் ஒரு அடி அடித்தால் நம்முடைய கை கால்களெல்லாம் சிதறிப்போகும்.

ஜயத்ரதன: ஐயோ, ஆச்சாரியர் அகப்பட்டுக்கொண்டாரே! நம்மால் ஒன்றும் செய்ய முடியவில்லையே! ஆச்சாரியரே, உங்களுக்கு உதவிதர எங்களுக்கு இயலவில்லை. எப்படியாவது உங்களைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள். எல்லாரும் ஒன்றுகூடி: ஐயையோ, ஆச்சாரியர் ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டாரே! நாம் எல்லாரும் ஒன்றுகூடி அந்த முதலையைப் பிடிக்கும் திறமையற்றவர்களாக இருக்கிறோமே! ஓடி வாருங்கள். ஓடி வாருங்கள். நாம் பலபேர் ஒன்றுகூடி ஆச்சாரியரையும் முதலையையும் சேர்ந்தாற்போன்று தண்ணீருக்கு வெளியே தூக்கினல் முதலையின் வலிவு குன்றிப்போம். பிடிப்பையும் அது விட்டுவிடும். ஆச்சாரியர் உயிர் தப்புவார். முதலையைக் கரைக்குத் தூக்கி வந்து கட்டிப்பிடித்து விடலாம். நிலத்துக்கு வந்த பிறகு அதனல் ஒன்றும் செய்ய முடியாது. அதனுடைய சாமர்த்தியமெல்லாம் தண்ணீருக்குள் இருக்கும் பொழுதுதான். வாருங்கள். வாருங்கள். முதலையைப் பிடியுங்கள். விட்டுவிடாதீர்கள். தைரியமாயிருங்கள். இப்பொழுதே குதியுங்கள்.

அம்பையும் வில்லையும் ஏந்தியவனாக அர்ஜுனன் ஓடி வருகிறான். மாணாக்கர் கூட்டத்தைப் பிளந்து கொண்டு நதிக்கரையோரம் வருகிறான்.

முதலையின் அடிவயிற்றில் அம்பு ஒன்றை எய்கிறான். அது வாயைப் பிளந்துகொண்டு நீரினுள் ஆழ மூழ்கித் தப்பித்து ஓடுகிறது. அர்ஜுனன் ஆச்சாரியரைத்

தூக்கி எடுத்துக் கரையில் வைக்கிருன். காலுக்குக் கட்டுப்போடுகிருன். பிறகு மாணக்கர் எல்லாரும் ஆச் சாரியர் காலில் விழுந்து வணங்குகிருர்கள். 'தாங்கள் தப்பித்தது தெய்வாதீனம்' என்று போற்றுகிருர்கள். புன்னகை பூத்தவராக ஆச்சாரியர் இந்த நிகழ்ச்சிகள் யாவையும் காணலுற்ருர்.

---

## காட்சி 5.

(துரோணுச்சாரியரும் அர்ஜுனனும் பேசிக்கொண்டிருக் கிருர்கள்.)

ஆச்சாரியர்: அர்ஜுன! உன்னுடைய சமயோஜித புத்தி யைப் பெரிதும் பாராட்டுகின்றேன். ஆபத்து வாய்த்த விடத்து மற்ற மாணக்கர்கள் எல்லாரும் குழம்பிக் கூப் பாடு போட்டுக்கொண்டிருந்தார்கள். நீ ஒருவன்தான் மனம் கலங்காதிருந்து செய்யவேண்டிய செயலைத் திறமையோடு சாதித்தாய்.

அர்ஜுனன்: ஆபத்து வேளையில் அத்தகைய அமைதியான மன நிலையை நான் பெற்றது தங்களது அனுக்ரஹத் தால். ஆபத்து வேளையில் தைரியம் ஒன்றே நமக்குப் பெருந்துணைபுரிகிறது என்று தாங்கள் பாடம் புகட்டி யுள்ளீர்கள். அதைப் பயன்படுத்துவதற்கு எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

ஆச்சாரியர்: உன்னை நான் கவனித்துப் பார்த்திருக் கிறேன். சந்தர்ப்பம் கிடைக்கிற பொழுதெல்லாம் அதை நீ வில்வித்தைக்கென்றே பயன்படுத்துகின்ருய்.

அத்தகைய நோக்கமும் ஊக்கமும் உனக்கு எப்படி வந்தன?

அர்ஜுனன்: குருதேவா, தங்களுடைய வாழ்க்கைமுறையை நான் கூர்ந்து கவனித்து வருகிறேன். ஒரு கணப்பொழுதையும் நீங்கள் வீண்போக்குவதில்லை. பயன்படுகிற நல்ல காரியங்களிலேயே நீங்கள் காலத்தை இனிது பயன்படுத்தி வருகிறீர்கள். நானும் அப்படியே செய்ய வேண்டுமென்னும் ஊக்கத்தை நான் தங்களிடமிருந்தே கற்றுக்கொண்டேன். வில்வித்தையில் எனக்கு விருப்பம் அதிகம். ஆதலால்தான் சிறிது நேரத்தையும் வீண் போக்காது அக்கலையை நான் பயின்று வருகிறேன்.

ஆச்சாரியர்: ஒருவனுடைய மன அமைப்பு எத்தகையது என்பதை அவன் தூங்குகிறபொழுது முகத்தைப் பார்த்துக் கண்டுபிடிக்கலாம். பல தடவைகளில் அந்த நோக்கத்தோடு உங்கள் எல்லாரையும் பார்க்க நள்ளிரவில் நான் வருவதுண்டு. நீயோ தனியாக இருந்துகொண்டு கார் இருளிலும் வில்வித்தை பயிலுகிறாய். அந்த எண்ணம் உனக்கு எப்படி வந்தது? இருள் சூழ்ந்த இரவு வில்வித்தைக்கு உதவாதே.

அர்ஜுனன்: நாங்கள் எல்லாரும் ஒரு தடவை இரவில் போஜனம் பண்ணிக்கொண்டிருந்தபொழுது தீபம் அணைந்து போயிற்று. அந்த இருளிலும் உணவைக் கையில் எடுத்து வாயில் வைக்க எனக்கு இயன்றது. இது சாத்தியமென்றால் இரவில் இதே பாங்கில் வில் வித்தையை நான் ஏன் பயிலலாகாது என்று எண்ணினேன். அம்முறையைப் பயிற்சி பண்ணி வருகிறேன். அதில் முன்னேற்றமும் அடைந்து வருகிறேன்.

ஆச்சாரியர்: மற்றொரு அதிசயத்தை உன்னிடம் நான் கண்டு வருகிறேன். நீ தனியாக இருந்துகொண்டு ஒரு தடவை வலக்கையில் அம்பு எய்கின்றாய். அடுத்த தடவை இடக்கையில் அம்பு எய்கின்றாய். இப்படிக் கை மாறி மாறித் தனுர்வித்தை பயிலுவதின் நோக்கம் யாது?

அர்ஜுனன்: இறைவா, ஒரு தடவை இறைவணக்கம் செய்த பொழுது கருத்து ஒன்று என் உள்ளத்தில் உதித்தது. கடவுளை வணங்குதற்கு இருகரங்களையும் ஒன்று கூப்பிப் பயன்படுத்துகின்றோம். கடவுள் வழிபாட்டுக்குப் பயன்படுகின்ற இடக்கை கலை வளர்ச்சிக்கு ஏன் பயன் படலாகாது? கலையை வளர்ப்பது கடவுள் வழிபாட்டுக்கு நிகர் அல்லவா? வழிபாட்டுக்குப் பயன்படுகிற இருகரங்களையும் கலை வளர்ச்சியிலும் நான் பயன்படுத்திப் பழகுகிறேன்.

ஆச்சாரியர்: அர்ஜுனா, உன்னிடம் ஊக்கமும், உழைப்பும் ஒன்று சேர்ந்து அமைந்திருக்கின்றன. இது கிடைப்பதற்கரிய பேறு. யார் ஒருவனுடைய உள்ளத்தில் ஊக்கம் ததும்பிக் கொண்டேயிருக்கிறதோ, யார் ஒருவன் கைவண்ணத்தை அயராது பயன்படுத்துகிறானோ அவன் மேன்மையுறுவது திண்ணம். உன்னுடைய திறமையை முன்னிட்டு உன்னை நான் தலை மாணாக்கனாக ஏற்றுக்கொள்ளுகிறேன். தனுர் வேதத்தில் சில அரிய பெரிய நுட்பங்களை அலாதியாக உனக்கே கற்பிப்பேன். அப்படி நீ பெறுகிற திறமையை உலக நன்மைக்காகவென்றே பயன்படுத்துவாயாக. மற்றொரு ரகசியத்தை உனக்குப் போதிக்கிறேன் கேள். கிருஷ்ணனை உன்னுடைய மைத்துனன் என்று கருது

வது உலக நடைமுறை. உண்மையில் அவன் பரமாத்மாவின் அவதாரம். அவனை நீ அங்ஙனம் மனதால் வழுத்துதற்கேற்ப நீ மேன்மையுறுவாய்.

**அர்ஜுனன்:** குருதேவா, தாங்கள் என்மீது தயை வைத்து என்னைத் தலைமாணாக்கனாக ஏற்றுக்கொண்டதற்கும், கிருஷ்ணனுடைய சொரூபத்தை உள்ளபடி எனக்குப் போதித்ததற்கும் நான் தங்களுக்கு என்ன கைம்மாறு செய்ய முடியும்!

(வீழ்ந்து வணங்குகிருன்)

**ஆச்சாரியர்:** முன்பு ஒரு தடவை உன்னிடம் குரு தக்ஷிணையாக நான் ஒன்றைக் கேட்டேன். துருபதனை உயிரோடு பிடித்து எனக்குத்தரவேண்டுமென்று வேண்டினேன். நீயும் அங்ஙனமே செய்து முடித்தாய். குருஸ்தானத்தில் இருப்பினும் அச்செயலுக்கு உனக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டவனாக இருக்கிறேன். இப்பொழுது உன்னைத் தன்னந்தனியனாக வைத்து மற்றொரு தக்ஷிணை கேட்கிறேன். அதைச் செலுத்த நீ மனமுவந்து முன் வருவாயா?

**அர்ஜுனன்:** ஆச்சாரியரே, என்னுடைய பயிற்சி முழுதும் தங்களுக்குரியது. தாங்கள் எதைச் செய்யும்படி எனக்கு ஆணையிடுகின்றீர்களோ அதை முக்கரணங்களைக் கொண்டு நிறைவேற்ற முயலுகின்றேன்.

**ஆச்சாரியர்:** எதிர்காலத்தில் பாண்டவர்களாகிய நீங்களும் தாயாதிகளாகிய கௌரவர்களும் ராஜ்ஜியத்தின் பொருட்டுப் போர் புரியப் போகின்றீர்கள். அப்போராட்டத்தில் விதிவசத்தால் நான் கௌரவர்களுக்காகவென்று போர் புரியப் போகின்றேன். தயங்காது

நீ அப்பொழுது என்னை எதிர்த்துப் போர் புரியவேண்டும். இதைத்தான் இரண்டாம் தடவை குருதக்ஷிணையாக உன்னிடமிருந்து வேண்டுகிறேன்.

அர்ஜுனன்: குருதேவா, இறைவனுடைய சங்கல்பம் தாங்கள் சொல்லுவது போன்று அமையுமாயின் தங்கள் ஆணைப்படி தங்களை எதிர்த்துப் போர்புரியத் துணிகிறேன். அவ்வேளையிலும் என் குருபக்தி மாருதிருக்கும்படி தாங்கள் அனுக்ரஹம் செய்வீர்களாக.

ஆச்சாரியர்: அங்ஙனமே ஆகுக. ஓம்.

---

## காட்சி 6.

(கலையின் பொருட்டு ஏகலைவன் துரோணாச்சாரியரை அணுகுகிருன்.)

ஏகலைவ்யன்: குருதேவா, தங்களை வணங்குகிறேன். (கீழே விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்கிருன்.)

துரோணர்: இளைஞா, நீ யார்?

ஏகலைவ்யன்: என் தந்தையின் பெயர் வீரவர்மன். அவர் வேடர்களுக்கு வேந்தனுக இருக்கிருர். குருக்ஷேத்ர பூமிக்கு வடபுறம் இருக்கும் வனத்தில் நாங்கள் வசித்து வருகிறோம்.

துரோணர்: இங்கு நீ எதற்காக வந்துள்ளாய்?

ஏகலைவ்யன்: சின்னஞ்சிறு வயதிலிருந்து தனுர்வேத வித்தையில் எனக்கு விருப்பம் அதிகம். என் போக்கில் ஏதோ ஓர் அளவில் அக்கலையை நான் வளர்த்திருக்கிறேன். ஒரு சிறிதளவு என் தந்தையிடமிருந்தும் மற்ற வேட நிபுணர்களிடமிருந்தும் அப்பயிற்சியை நான் பெற்றிருக்கிறேன்.

துரோணர் : அது மிக நன்று. அதே விதத்தில் அக்கலையை மேலும் பயின்று வா.

ஏகலைவ்யன் : குருதேவா, நான் வாழ்க்கையில் இலட்சிய மாய்க் கொண்டிருப்பது வெறும் வில்வித்தையில் வல்ல வன் ஆவது மட்டுமல்ல. அதன் மேலாம் பகுதிகள் மந்த்ர சக்தியோடு கூடியவை என்றும் அத்தகைய மேலாம் பகுதிகளைக் கற்றுக்கொள்ளுதற்குத் திறமை வாய்ந்த குரு ஒருவருடைய துணை வேண்டுமென்றும் கேள்விப்படுகிறேன். ஆதலால் ஆர்வத்தோடு தங்களை நாடி வந்துள்ளேன்.

துரோணர் : மந்த்ர சக்தியோடு கூடிய வில்வித்தை ஒன்று இருக்கின்றதென்று நீ யாரிடமிருந்து அறிய வந்துள் ளாய்.

ஏகலைவ்யன் : எனக்கு வில்வித்தை கற்பித்துக் கொண்டி ருந்த பொழுதெல்லாம் பழங்காலத்தில் தனுர் வேதத் தில் உச்சநிலை எய்தியிருந்த ரகுராமனைப் பற்றி என் தந்தை எனக்கெடுத்து உரைத்து வந்தார். அதைக் கேட்டதின் விளைவாக நானும் ஓரளவு அக்கலையில் முன் னேற வேண்டுமென்று அவாக் கொண்டிருக்கிறேன்.

துரோணர் : பழங்காலத்தில் வசித்து வந்த ரகுராமன் இக் காலத்தில் மண்ணுலகில் இல்லை. அவன் யதாஸ்தானம் சென்றுள்ளான். ஆதலால் அவனுடைய திறமையைப் பற்றி நாம் கேட்டு மகிழ்வுறுவதோடு நம் கடமை முடி கிறது. இக்காலத்தவர்களாகிய நம்மவர்களுக்கு ரகு ராமன் படைத்திருந்த தெய்விக தனுர்வேத ஞானம் வாய்க்கமாட்டாது. ரகுராமனுடைய பராக்கிரமங்களைப் பற்றிப் பேசி மகிழ்வடைவது ஒன்றே நமக்குப் போது மானது.

ஏகலைவ்யன் : விப்ர வேந்தே. ஓர் விண்ணப்பம். யுகங்கள் மாறி மாறிக் கீழ்நிலைக்கு இறங்குகின்ற பொழுது தெய்விக வித்தைகளும் தரத்தில் கீழே வருகின்றன. ஆயினும் அவைகள் அறவே அழிந்துபட்டுப் போவதில்லை என நான் கேள்விப்படுகிறேன்.

துரோணர் : நீ கேள்விப்பட்டது பெரிய விஷயம் தான். அத்தகைய பெருமக்கள் உலகில் இருந்தால் அவர்களை நீ தேடிக் கண்டு பிடி.

ஏகலைவ்யன் : இறைவா, அத்தகைய மஹாபுருஷர் ஒருவர் முன்னிலைக்கு நான் இப்பொழுது வந்துள்ளேன் என்று எண்ணி மகிழ்வடைகிறேன். நான் பகர்வதில் குற்றம் ஏதேனும் இருக்குமாகில் என்னை மன்னித்தருளுங்கள்.

துரோணர் : என்னிடம் அஸ்திர சஸ்திர வித்தைகள் அமைந்துள்ளனவென்று உனக்குச் சொன்னது யார்? அன்னவர்களின் வாக்குகளில் நீ ஏன் விசுவாசம் வைத்துள்ளாய்?

ஏகலைவ்யன் : அல்லும் பகலும் தனுர்வேத வித்தையைப் பற்றியே நான் சிந்தனை கொண்டு இருப்பதால் அதற்குரிய நற்செய்திகள் பலப்பல பெருமக்களிடத்திருந்து எனக்கு எட்டுவனவாயின. ஆதலால்தான் பசு இருக்குமிடத்துக்குக் கன்று தானாக ஓடுவது போன்று தங்களை நாடி நான் வந்துள்ளேன். என்னுடைய ஞான வேட்கையைத் தாங்கள் தான் பூர்த்தி பண்ணி வைக்கவேண்டும்.

துரோணர் : உலக மக்களுடைய போக்கு அலாதியானது. தங்களுக்குப் பிடித்துள்ள ஒரு மனிதனை வான்அளாவத் தூக்கி வைத்துப் பேசுவார்கள். பிடிக்காத மற்றொரு மனிதனைப் பாதாளத்தில் தள்ளுவது போன்று தாழ்த்தி

வைத்துப் பேசுவார்கள். ஊரார் பேச்சைக் கேட்டு நாம் மதிமயங்கிப் போய்விடலாகாது.

ஏகலைவ்யன் : பிரபோ, கலையைப் பெறுவதிலேயே நான் கண்ணும் கருத்துமாயிருப்பதால் எது வீண் பேச்சு, எது பொருள் சேர்ந்த புகழ் என்பதை நன்கு உணர்கிறேன். தாங்கள் சாக்ஷாத் பரசுராமரிடமிருந்து தனுர் வேதத்தை முற்றிலும் பயின்று உள்ளீர்கள் என்றும் இக் காலத்தில் தங்களுக்கு நிகரான வில்வித்தை வல்லுநர் யாருமில்லை யென்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அதில் முழு நம்பிக்கை வைத்திருக்கிறேன். தங்களுடைய தரிசனத்தாலேயே நான் பாக்கியவான் ஆயிருப்பதாக உணருகிறேன். என்னை ஏற்றருளும்படி திரிகரண சுத்தியுடன் விண்ணப்பிக்கிறேன்.

துரோணர் : என்னைப் பற்றி நீ கேள்விப்பட்டிருப்பது முற்றிலும் மெய். ஆயினும் உன் எண்ணம் நிறைவேருது.

ஏகலைவ்யன்: பெறமுடியாததைத் தவத்தின் விளைவாகப் பெறலாம் என்பது ஆன்ரோர் வாக்கு. தனுர்வேதக் கலைக்காகவென்றே நான் திரிகரண சுத்தியுடன் தவம் புரிந்து வருகிறேன். ஞானவேட்கை படைத்திருப்பவர்களுக்கு ஞானத்தை நல்குவது ஆன்ரோர் செயல் எனவும் நான் அறிய வருகிறேன். தேவே, கிருபைகூர்ந்து என்னைச் சிஷ்யனுக ஏற்றுக்கொள்ளுங்கள். என்னைத் தாங்கள் புறக்கணித்து விட்டால் என் வாழ்வே அனர்த்தமாய்ப் போய்விடும்.

துரோணர்: வில்வித்தையில் நீ இவ்வளவு ஊக்கம் படைத்திருப்பது பாராட்டத்தக்கது. ஆயினும் உன்னை நான் சிஷ்யனுக ஏற்றுக்கொள்ளமாட்டேன்.

ஏகலைவ்யன்: தங்கள் அருளுக்கு நான் பாத்திரம் அல்லன் என்பதற்குக் காரணம் ஏதேனும் இருக்குமானல் கிருபை கூர்ந்து அதை எடுத்துக் கூறுங்கள். என்னிடத்து உள்ள குறை நிலையை நிறைநிலையாகத் திருத்தியமைக்க நான் முயலுகிறேன்.

துரோணர்: முயற்சியால் சில குறைகளை அகற்றலாம். வேறு சில குறைகளை எவ்வளவுதான் முயன்ருலும் அகற்ற முடியாது.

ஏகலைவ்யன்: பிரபோ, என்னை மன்னியுங்கள். நான் படைத்துள்ள தனுர்வேத ஞான வேட்கையைப்பற்றி எனக்குச் சிறிதேனும் ஐயமில்லை. மனபரிபாகத்தில் என்னிடத்தில் குறை ஏதேனும் இருக்குமாகில் நான் புரிந்து வருகிற தவத்தைப் பன்மடங்கு ஓங்குவித்து அக்குறையை அகற்றிவிடுவேன்.

துரோணர்: நீ வேட வேந்தனுக்குப் புதல்வன் அல்லவா?

ஏகலைவ்யன்: ஆம் பிரபோ, அதை நான் தங்களிடம் ஏற்கனவே இயம்பி ஆய்விட்டது.

துரோணர்: வேடர்களுக்கு நான் வில்வித்தை கற்பிக்க மாட்டேன்.

ஏகலைவ்யன்: ஞான வேட்கை படைத்திருப்பவன் எக்குடியில் பிறந்திருக்கிருன் என்பதைப் பொருள்படுத்த வேண்டியதில்லை என்பதுதானே நியதி. நான் வேட வேந்தனுக்கு மகனுகப் பிறந்திருப்பதற்குப் பொறுப்பாளி நான் அல்லன். அது தெய்வாதீனமாக நடந்துள்ளது. கலையில் நான் படைத்துள்ள ஆர்வத்தையே தங்களிடம் நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். கலை

நாட்டத்தை ஆழ்ந்து வளர்த்து வருபவனை ஒருநாளும் புறக்கணிக்கலாகாது என்பது கோட்பாடு.

துரோணர்: நீ சொல்லுவது முற்றிலும் மெய். நீ கலைக்கு அருகதை வாய்த்துள்ளவன் என்பதை அறிய வருகிறேன். ஆயினும் நான் பூண்டுள்ள திட்டத்தில் நீ இடம்பெறமாட்டாய். போர்புரியத் தகுதி வாய்ந்த க்ஷத்திரிய இளைஞர்களுக்கே என் கலையை எடுத்துப் பங்கிட்டுக் கொடுக்க நான் உத்தேசித்துள்ளேன். அத்தகைய திட்டத்தில் உனக்கு இடமில்லை. ஆகையால் தான் உனக்கு அஸ்த்ர சஸ்த்ர வித்தையை எடுத்து வழங்க மறுக்கிறேன்.

ஏகலைவ்யன்: பிரபோ, தங்களுடைய திட்டத்தை மாற்றியமைக்கும்படி நான் கனவிலும் கருதேன். க்ஷத்திரியர்களாகப் பிறந்திருப்பவர்களுக்கே தங்களுடைய ஞானப் பொக்கிஷத்தைப் பகிர்ந்து கொடுப்பது தங்களுடைய திருவுளப்பாங்கு ஆகில் அது என்னுடைய தௌர்ப்பாக்கியம். ஆயினும் தங்களுடைய திட்டத்துக்கு இடுக்கண் விளைவியாது அடியேனுக்கும் தாங்கள் ஒரு போக்கில் அனுக்ரஹத்தையாவது எனக்குக் கொடுத்தருளுங்கள்.

துரோணர்: நீ நாடுகிற வேறு அனுக்ரஹம் யாது?

ஏகலைவ்யன்: விப்ர வேந்தே! ஏற்கனவே தங்களை நான் என்னுடைய குருவாக மானஸீகமாக ஏற்றுள்ளேன். அதை இனி நான் எக்காரணத்தை முன்னிட்டாவது எப்பொழுதாவது மாற்றமாட்டேன். இந்தத் தீர்மானத்தில் நான் நிலைத்திருக்கும்படி என்னைத் தாங்கள் ஆசீர்வதித்தால் போதுமானது. இதுவே எனது விண்ணப்பம்.

துரோணர்: ஏகலைவ்யா, உன்னுடைய குரு பக்தியையும் சிரத்தையையும் நான் பாராட்டுகிறேன். மாணுக்கனொரு வன் மானஸீகமாக எந்த ஆச்சாரியனை வேண்டுமானு லும் தன்னுடைய குருவாக சங்கல்பித்துக்கொள்ளலாம். அதற்கு யாருமே தடை சொல்ல முடியாது. தடை சொல்லுவதும் பொருந்தாது. உன் இஷ்டம் போல் நீ நடந்துகொள். இங்கே நான் பயிற்சிகொடுத்து வரு கிற மாணுக்கர் கூட்டத்தில் மட்டும் உன்னை நான் சேர்த்துக்கொள்ளமாட்டேன்.

ஏகலைவ்யன்: பிரபோ! தாங்கள் கொண்டுள்ள தீர்மானம் ஒருநாளும் எனக்கு இடைஞ்சல் ஆகாது. மானஸீக மாகத் தங்களை என் குருவாக வைத்துக்கொள்ளுதற்குத் தாங்கள் தடைபோடமாட்டீர்கள் என்று பகர்ந்தருளி யுள்ளீர்களே, அதுவே எனக்குப் போதுமானது. தங்க ளுடைய அனுக்ரஹத்தால் என்னுடைய இலட்சி யத்தை நான் நிறைவேற்றுவேன் என்னும் உறுதி எனக்கு உண்டு.

துரோணர்: இளைஞா, தலைமாணுக்கன் ஒருவனுக்கு இருக்க வேண்டிய தகுதிகளெல்லாம் உன்னிடம் தென்படுகின் றன. ஆயினும் நான் கொண்டுள்ள திட்டத்தினின்று விலகும் எண்ணம் எனக்கில்லை. உனக்கு எல்லா நலன்களும் உண்டாவதாகுக. சென்று வா.

ஏகலைவ்யன்: குருவே துணை, குருவே போற்றி, குருவே போற்றி! போற்றி.

(போகிருன்)

---

## காட்சி 7.

*(ஏகலைவ்யன் புரிகிற மானஸ பூஜை)*

ஏகலைவ்யன்: குழந்தை ஒன்றுக்குத் தாயை விட்டுப் பிரிந்திருக்கின்ற நெருக்கடி நேருகின்றபொழுது அதனுடைய தாயன்பு பன்மடங்கு வளருகிறது. அத்தகைய நெருக்கடியில் நானும் இப்பொழுது இருந்து வருகின்றேன். குருவின் வடிவம் என் மனதைவிட்டு மாருது மிளிர்ந்துகொண்டிருக்கிறது. அதைப்பற்றி எண்ண எண்ண ஆர்வம் என்னிடத்து அதிகரிக்கிறது. கிருபை கூர்ந்து ஆச்சாரியதேவர் என் உள்ளத்தில் எழுந்தருளியிருக்கிருர். தனுர் வேதக் கலையை நான் பயிலவேண்டுமென்று விரும்புகிறபொழுதெல்லாம் அவர் என் சித்தமிசை வீற்றிருந்துகொண்டு பாடம் புகட்டி வருகிருர். மலர் தாஞக மலர்வதுபோன்று என் உள்ளத்தினுள் கலைஞானம் வடிவெடுத்து வருகிறது. இன்னின்ன பாங்குகளில் வில்லைப் பற்றிப்பிடி. இன்னின்ன பாங்குகளில் அம்பைத் தொடுத்துவை. இன்னின்ன பாங்குகளில் இலக்கை நோக்கிக் குறிபிடி. இன்னின்ன பாங்குகளில் அம்பு எய்திடு என்றெல்லாம் குருதேவர் எனக்குப் பயிற்சி கொடுத்து வருவதாக நான் உணருகிறேன். நான் பயின்று வரும் வில்வித்தைக்கு விக்கினம் ஏதும் இல்லை. ஆச்சாரியரைத் தரிசித்த நாள் முதற்கொண்டு என்னிடத்துப் புதிய வேகம் ஒன்று உருவெடுத்திருக்கிறது. அது மேலும் மேலும் வளர்ந்து கொண்டே வருகிறது. என்னை நான் பாக்கியவாஞக உணருகிறேன். குரு கிருபை பரிபூரணமாக என்மீது அமையப்பெற்றிருப்பதாக அறிகிறேன். ஆர்வம் நிறைந்த

இத்தகைய மானஸ பூஜைக்குத் துணைபுரிகின்ற பாங்கில் பாகிய பூஜையும் நான் பண்ணி வருவேன். அதற்காக வென்று ஆச்சாரிய தேவரின் விக்கிரஹம் ஒன்றை அமைத்துக்கொள்ளுவேன். காயத்தால் நான் நிறைவேற்ற வேண்டிய குரு கைங்கரியங்களையெல்லாம் அந்த விக்கிரஹத்தின் வாயிலாக அவருக்கு அன்புடன் புரிந்து வருவேன். அவருடைய அனுக்ரஹத்தை முகாமையாக வைத்துக்கொண்டு தனுர்வேதப் பயிற்சியில் தீவிரமாக ஈடுபடுவேன். இதற்கு நிகரான வாய்ப்பு யாது உளது? என்னைக் கிருதார்த்தனாக அறிகிறேன். கிடைப்பதற்கரிய குருவின் அனுக்ரஹம் எனக்குப் பரிபூரணமாகக் கிட்டியிருக்கிறதென்று உணருகிறேன். பாகிய பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் இனி நான் அமைத்துக்கொள்ளுகிறேன்.

---

## காட்சி 8.

( பாஹிய பூஜையும் பயிற்சியும் )

துரோணாச்சாரியர் விக்கிரஹத்துக்கு ஏகலைவ்யன் தீபம் ஏற்றுகிறான், தூபம் கொளுத்துகிறான், மாலை சூட்டுகிறான், நைவேத்யம் அமைக்கிறான், தியானம் பண்ணுகிறான், ஆசனம் படைக்கிறான், தோழர்களைக் கூப்பிடுகிறான், தீபாராதனை பண்ணுகிறான். கூடியவர்கள் பஜனை பண்ணுகிறார்கள். ஓம் குரு, சத்குரு, ஹர குரு ஓம் என்று நாம உச்சாரணை செய்கின்றனர். (ஆறு தடவை பாடுகிறார்கள்.) ஓம் குரு (ஒருவன்) ஸத்குரு (எல்லோரும்) நர்த்தனம் புரிகிறார்கள். பிரசாதம் வழங்கப்படுகிறது.

---

## காட்சி 9.

(ஏகலைவ்யன் கனவில் துரோணுச்சாரியர் தோன்றுகிருர்.)

**துரோணர்:** ஏகலைவ்யா, மனிதனுக்கு அமைந்துள்ள வாய்ப்புகளுள் காலம் மிக முக்கியமானது. கணப்பொழுது கணப்பொழுதாக அது கடந்து போய்க் கொண்டே இருக்கிறது. கடந்துபோன ஒரு கணத்தை மீண்டும் பெறமுடியாது. ஓர் ஊரை நோக்கி நிதானமாக நடந்து போகிறவன் வேகமாக நடந்து நிதானத்துக்கு ஈடுசெய்து கொள்ளலாம். ஒரு காலத்தில் செல்வம் சம்பாதியாதிருந்தவன் மற்ருெரு காலத்தில் அதிகப்படி செல்வம் சம்பாதித்துக் குறைசெல்வத்தை நிறைசெல்வமாக்கலாம். மறந்து போன பாடத்தை மீண்டும் கற்று அதற்கு ஈடுசெய்து கொள்ளலாம். பிறர்க்குச் செய்த தீங்குக்குப் பரிகாரமாகப் பன்மடங்கு நலன் செய்து தீங்கைத் தவிர்க்கலாம். செய்யவேண்டியதைச் செய்யாது விட்டதற்கு ஈடு ஆக ஒருவன் செயலைப் பன்மடங்கு அதிகப்படுத்தலாம். ஆனல் வீணே கழிந்து போன காலத்துக்கு ஈடு ஏதுமில்லை. ஆதலால் அறிவு படைத்துள்ள மானுடன் ஒருவன் காலத்தின் மகிமையை நன்கு அறிந்து கொள்ளக் கடமைப்பட்டிருக்கிருன். அதைஅறிந்து கொண்டதற்கு அறிகுறியாக அவன் வீண்பொழுது போக்கலாகாது.

**ஏகலைவ்யன்:** குருதேவா, தங்கள் போதனையில் பரந்த கருத்து அடங்கியிருக்கிறது. காலத்தை நன்கு பயன்படுத்தக் கற்றுக் கொண்டவர்கள் பாக்கியவான்கள். என் ஜன்மத்தில் இதுவரையிலும் நான் வீண்காலம்

போக்கியதாகத் தெரியவில்லை. இனிமேல் கண்ணும் கருத்துமாகக் காலத்தை நல்ல காரியங்களுக்காகவே பயன்படுத்துவேன். தங்கள் கிருபையால் காலத்தின் மகிமையை இப்பொழுது நன்கு அறிகிறேன்.

**துரோணர்:** ஏகலைவ்யா, காலத்தை நன்கு பயன் படுத்துவது கடவுள் வழிபாட்டுக்கு நிகரானது. கடவுள் கால சொரூபமாகவும், காலத்தைக் கடந்தவராகவும் இருக்கிறார். உடல் எடுத்துள்ள நாம் அனைவரும் காலத்தில் கட்டுண்டிருக்கிறோம். அவ்வுண்மையை அறிந்து கொண்டு ஒவ்வொரு கணப்பொழுதையும் நன்கு பயன் படுத்துவோமானால் அது கடவுளுக்குப் பிரீதிகரமாகிறது. காலத்தை நன்கு பயன்படுத்துகிறவர்களுக்கு அவருடைய கருணை கிட்டுகிறது.

**ஏகலைவ்யன்:** குருதேவா, தாங்கள் புகட்டுகிற இக்கோட்பாடு மனத்தகத்து மறைந்து கிடந்த மருளைப் போக்குகிறது. முறையாக நாடுகிறவர்களுக்கு இறைவனுடைய அருள் யாண்டும் சொந்தம் என்பதை நான் இப்பொழுது அறிய வருகிறேன். நிச்சயமாக ஆண்டவனுடைய அருளுக்கு என்னை நான் சொந்தமாக்குவேன்.

**துரோணர்:** ஏகலைவ்யா, மற்றும் ஓர் உண்மையை உனக்கு எடுத்து உபதேசிக்கிறேன். அதை ஏற்று நன்கு பயன் படுத்துவாயாக. சிரத்தை என்பது அவரவர் மன நிலையைப் பொறுத்ததாகும். சிரத்தை என்னும் தெய்விக சம்பத்தானது பேரூக்கம் எனப் பொருள்படுகிறது. நல்வழியில் மனிதன் எடுத்துக்கொள்ளும் மேலான முயற்சியும் சிரத்தை எனப் பொருள் படுகிறது. 'யோ யத், சிரத்த: ஸ ஏவ ஸ:' என்பது வேத வாக்கு.

